12th September 1958]

MR. SPEAKER : இந்தக் கேள்வி முத்தைப் பற்றியது. சங்குகளைப்பற்றியல்ல.

### *Industrial estates*

* 200 *Q.*—SRI T. VELUCHAMI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா— 9-40 a.m.

தேசிய அபிவிருத்திப் பகுதிகளில் தொழில் பேட்டைகள் (Industrial Estates) நிறுவும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir. The Government are establishing Industrial Estates at Erode in the Lower Bhavani Pilot Project area, Marthandam in the Munchira Community Development Block and Madurai and Virudhunagar in the National Extension Service areas.

SRI T. VELUCHAMI : ஒரு real development மக்களிடையே காண வேண்டுமானால் போதிய நிலமோ தொழிலோ வேலையோ இல்லாத 'ஹாவ்-நாட்ஸ்' என்று சொல்லக்கூடிய மக்களுக்கு வேலை வாய்ப்பும் தொழில் வாய்ப்பும் ஏற்படுத்திக் கொடுப்பதில்தானிருக்கிறது. ஆகவே, இந்த ப்ளாக் டெவலப்மென்ட் திட்டத்திலுள்ள பல அனுவசியமான செலவுகளைக் குறைத்து ஒவ்வொரு ப்ளாக்கிலும் ஒரு சிறிய அளவு இன்டஸ்ட்ரியல் எஸ்டேட் ஆரம்பித்து, அந்த மக்களை வேலையில் பழக்கி அவர்களுக்கு ஒரு ஜீவனோபாயம் தேடக்கூடிய முறையை அரசாங்கம் கவனிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : மக்களுக்கு வாழ்க்கை வசதிகளையும், வேலை வாய்ப்புக்களையும் அதிகரிக்கவேண்டுமென்ற கொள்கை சர்க்காருடையது. அதை கனம் அங்கத்தினர்கள் திருப்பிச் சொன்னதற்கு நான் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். வேலை வாய்ப்புக்கள் அளிப்பதற்கு சிறு கைத்தொழில்கள் ஏராளமாக ப்ளாக் ஏரியாவிலே ஆரம்பிக்கின்றோம். குடிசைத் தொழில்கள், கிராமத் தொழில்கள், சிறு கைத்தொழில்கள் எல்லாம் ஆரம்பிக்க வேண்டியது அவசியமே. ஆனால், ஒரு இண்டஸ்ட்ரியல் எஸ்டேட் வைப்பதன் மூலமாகத்தான் தொழில் அபிவிருத்தி அடையும் என்று நினைப்பது தவறு. தொழிலை ஆரம்பித்துத்தான் தொழில் வைக்கும் இடங்களைக் காட்டிக் கொடுக்க வேண்டும். இப்பொழுதிருக்கும் முயற்சிகளெல்லாம் சிறு தொழில்கள் ஆரம்பிப்பதற்காக இருக்கின்றன.

### *Buckingham canal*

* 201 *Q.*—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the steps taken to avoid the foul smell emanating from the waters of Buckingam canal in the Madras City; and

(*b*) the reasons for such emitting of bad smell from the said canal?

THE HON. SRI P. KAKKAN : (*a*) So far the most important step taken to combat the foul smell is the raising of the level in the Buckingam canal and the Cooum by pumping sea water into them.

(b) The main causes for the bad smell are—

(1) Discharge of sewage water into Buckingam canal and the Cooum at a few places and (2) the stinking slopes of the canal and river-bed getting exposed to the hot sun during the summer months when the water-level goes down.

[12th September 1958

SRI S. PAKKIRISAMI PILLAI : துர்நாற்றம் சாதாரணமாக மார்ச்-எப்ரல் மாதத்திலே ஏற்படுகிறது. இம்மாதிரியான ஒரு நாற்றம் ஒவ்வொரு வருஷமும் நாம் சுவாசிக்க முடியாத அளவுக்கு இருப்பதால் அரசாங்கத்தார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறார்கள் ? தூர் வாருவதால் இம்மாதிரியான துர்நாற்றத்தைப் போக்குவதற்கு வழி ஏற்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON SRI P. KAKKAN : சென்னை கார்ப்பரேஷன் இத் துர்நாற்றத்தைப் போக்க ஒரு திட்டம் தயாரித்திருக்கிறார்கள். மதிப்பிற்குரிய அங்கத்தினர் அவர்கள் கார்ப்பரேஷனிலும் அங்கம் வகிப்பதால் அவருக்கே இது தெரியும் என்று நினைக்கிறேன். இதுபற்றி இப்பொழுது கார்ப்பரேஷனிடத்திலே கலந்து பேசிக் கொண்டிருக்கிறோம். பின்னால் தான் ஒரு முடிவு தெரியும் என்று நினைக்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : பக்கிங்காம் கனாலிலே ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து கழிவுப் பொருள்கள் விடப்படுவதாகத் தெரிகிறது. ஆகவே, ஜெனரல் ஆஸ்பத்திரியின் கழிவுப் பொருள்களை சூயேஜ்ஜிலே சேர்த்துவிட்டால், பக்கிங்காம் கால்வாயில் பாதி அளவாவது துர்நாற்றம் குறையும் அல்லவா ? அதை ஹெல்த் மினிஸ்டர் அவர்கள் கவனிப்பார்களா ?

MR. SPEAKER : அந்தக் கேள்வியைக் கனம் ஹெல்த் மினிஸ்டர் அவர்களுக்குத்தான் போட வேண்டும்.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that the letting in of the sewage water from the Penitentiary into this canal also contributes to the foul smell?

THE HON. SRI P. KAKKAN : The hon. Member may put a separate question.

SRI K. ANBAZHAGAN : பக்கிங்காம் ஓடையில் கடல் நீரைத் தேக்குவதால்கூட, அதனுடைய முடை நாற்றம் போய்விடும் என்று நம்புவதற்கில்லை என்ற காரணத்தால், புது நீர்—ஆற்று நீர்—அதிலே சேர்க்கப்படுவதற்கு ஏதேனும் வழிவகை செய்ய அரசாங்கம் திட்டமிடுமா ?

THE HON. SRI P. KAKKAN : புதிய நீர் விடுவது தெரியாது. இருந்தாலும், சென்னை கார்ப்பரேஷன் 16·9 லட்ச ரூபாய் செலவில் ஒரு திட்டம் தயார் செய்திருக்கிறார்கள். அது தென் சென்னையைப் பொறுத்த மட்டிலும் இந்த நாற்றத்தைப் போக்குவதற்கு வழி செய்யுமா என்று பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

*Electricity*

* 203 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state the amount of loss in production due to electricity cut in the recent months?

THE HON. SRI R. VENKATARAMAN : There is no information with the Government. The information will have to be collected from the innumerable industries situated throughout the State. The time and labour involved in such collection will not be commensurate with the benefits likely to accrue.

SRI K. SATTANATHA KARAYALAR : May I know at least the loss in production so far as the textile industry is concerned?

THE HON. SRI R. VENKATARAMAN : It is not possible to estimate it, Sir.